# திருப்புகழமிர்தம்



ஆசிரியர்

## கிருபானந்தவாரி

சௌம்ய

வயலி நகரியி லருள் பெற மயில் மிசை
யுதவு பரிமள மதுகர வெகுவித
வனச மலரடி கனவிலு நனவிலு மறவேனே.

தை

உ

# அடுத்த ஆண்டுச் சந்தா

மலேஷியா, சிங்கப்பூர் மற்றும் (இலங்கை தவிர) வெளிநாடுகளிலுள்ள சந்தா நேயர்கள் அடுத்த ஆண்டுக்கான தங்கள் சந்தாத் தொகைகளை உடனே அனுப்பிவைக்க வேண்டுகின்றோம். சந்தாத் தொகையை Money Order மூலமே அனுப்பவும் - B. P. O. (பிரிடிஷ் போஸ்டல் ஆர்டர்களோ) பாங்கு டிராப்டுகளோ அனுப்பவேண்டாம். Money Order மூலமனுப்பி விட்டு ஒரு கடிதம் எழுதிவிடுவதே எளிய வழி. மற்றவைகள் வழியில் தவறிவிட்டாலோ, வேறு எழுதவேண்டிவைகளைச் சரிவர எழுதாவிட்டாலோ வீண் பிரயாசை ஏற்படும். ஆகவே Money Order மூலமே அனுப்புவது நல்லது.

**வெளிநாட்டுச் சந்தா ரூ 5 - 50.**

வசதிப்படுவோர் பின்வரும் அன்பர்களிடம் நேரில் செலுத்தலாம்.

1. திரு. K. K. மாணிக்க முதலியார்,
   44, Gopeng Road, Penang.
2. திரு. G. Kulandaivelu Thevar
   46, Jalan Chermai off Jalan Raja Muda, KualaLumpur.
3. திரு. A. S. நாகலிங்கம்,
   25, Hoover Park, Hose Road, Teluk Anson (Perak)

---

உ

முருகா

# சென்னையில் ஆசிரியர் விரிவுரைகள்

1970 ஜனவரி 24 சனிக்கிழமை முதல் பிப்ரவரி 12ந் தேதி வரை நாள் தோறும் மாலை 7 மணி முதல் 9 மணி வரை ஆசிரியர் திருமுருக கிருபானந்தவாரி அவர்களால், சென்னை ஆஸ்திக சமாஜத்தின் ஆதரவில் – சென்னை ஆழ்வார்ப்பேட்டை—வீனஸ் காலனியில்—பெரிய புராணம் 15 நாட்களும், திருவிளையாடற் புராணம் 5 நாட்களும் ஆக விரிவுரை இனிது நிகழும். அன்பர்கள் அனைவரும் வந்து கேட்டுப் பயன் பெறலாம்.

மானேஜர் திருப்புகழமிர்தம்.

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்



"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

| மலர் 34 | ஸௌமிய ஹு—தை மீ<br>ஜனவரி 1970 | இதழ் 10 |
|---|---|---|

## திருப்புகழ்

### திருவருணை

இரவு பகற் பலகாலும்
இயலிசைமுத் தமிழ்கூறித்
திரமதனைத் தெளிவாகத்
திருவருளைத் தருவாயே
பரகருணைப் பெருவாழ்வே
பரசிவதத் துவஞான
அரனருள்சற் புதல்வோனே
அருணகிரிப் பெருமாளே.

### பதவுரை

பர கருணை = மேலான கருணையுடன் விளங்கும், பெருவாழ்வே = பெரிய வாழ்வே! பர சிவ = மேலான சிவமயமான, தத்துவ ஞான = உண்மை ஞானப் பொருளே! அரன் அருள் = சிவபெருமான் அருளிய, சற்புதல்வோனே = நல்ல புதல்வரே! அருணகிரி = திருவண்ணமலையில் எழுந்தருளியிருக்கும், பெருமாளே = பெருமையிற் சிறந்தவரே! இரவு பகல் பலகாலும் = இரவும் பகலும் பலமுறையும், இயல் இசை = இயல், இசை (நாடகம்) என்ற, முத்தமிழ் கூறி = மூன்று தமிழாலும் உம்மைப் புகழ்ந்து பாடி, திரம் அதனை = நிலையான பொருள் எதுவோ

அதனை, தெளிவு ஆக=அடியேனுக்குத் தெளிவுடன் விளங்க, திரு அருளைத் தருவாயே=தேவரீருடைய திருவருளைத் தருவீராக.

### பொழிப்புரை

சிறந்த கருணையுடன் விளங்கும் பெருவாழ்வே! மேலான சிவமயமான உண்மை ஞானப் பொருளே! சிவபெருமான் பெற்ற இனிய குமாரமூர்த்தியே! திருவண்ணாமலையில் வீற்றிருக்கும் பெருமிதமுடையவரே! இரவிலும் பகலிலும், பல முறையும், இயல் இசை நாடகம் என்ற முத்தமிழாலும் தேவரீரைப் புகழ்ந்துபாடி நிலைபேறான பொருள் இன்னதென்று விளங்குமாறு உமது திருவருளைத் தருவீராக.

### விரிவுரை

**இரவு பகல் பலகாலும் :—**

இறைவனுடைய புகழை இரவிலும் பகலிலும் மற்ற எந்நேரங்களிலும மறவாமல் கூறிப் பாடித் துதி செய்ய வேண்டும்.

**இயலிசை முத்தமிழ் கூறி :—**

இயலிசை முத்தமிழ் என்றதனில் இனம் பற்றி நாடகத் தமிழும உடன்கூட்டிக் கொள்ளவேண்டும்.

முத்தமிழாலும் முருகவேளை ஏத்திப் போற்ற வேண்டும்.

**திரமதனைத் தெளிவாகத் திருவருளைத் தருவாயே :—**

திரம்—நிலையானது.

மண், மலை, கடல், மதி, கதிர் முதலியன அனைத்தும் நிலையில்லாதவை. நிலையில்லாத பொருளை நிலைத்ததாகக் கருதுவது அறிவின்மையாகும்.

"நில்லாதவற்றை நிலையின என்றுணரும்
புல்லறி வாண்மை கடை." —குறள்

உடம்பு, பதவி, செல்வம், ஆண்மை, வீரம் முதலியன இன்றிருந்து நாளை மறையக்கூடியவை. இவைகளைக் கண்டு, இவை என்றும் இருக்கக்கூடியவை யென்று தருக்குறக் கூடாது. நிலையாயப் பொருள் பரம்பொருள் ஒன்றே யாகும்.

அப்பொருளைப் பெறும்பொருட்டுத் திருவருளை வேண்டுதல் வேண்டும்.

**பரகருணைப் பெருவாழ்வே :—**

மிகப் பெருங் கருணையுடன் கூடிய பெருவாழ்வாகக் காட்சி தருபவர் முருகவேள்.

**பரசிவதத்துவ ஞான :—**

முருகப் பெருமான் மேலான மங்களமான உண்மை ஞானப் பொருள் எனத் தெளிக.

**கருத்துரை**

அருணை மேவும் அரசே! நிலைத்த பொருளையடையத் திருவருள் புரிவாய்.

## திருப்புகழ்

இருவினை யூண்ப சும்பை கருவிளை கூன்கு டம்பை
யிடரடை பாழ்ப்பொ தும்ப கிதவாரி
இடைதிரி சோங்கு கந்த மதுவது தேங்கு குப்ப
மிரவிடை தூங்கு கின்ற பிணநோவுக்

குருவியல் பாண்ட மஞ்சு மருவிய கூண்டு நெஞ்சொ
டுயிர்குடி போங்கு ரம்பை யழியாதென்
றுலகுட னேன்றுகொண்ட கருமபி ராந்தொ ழிந்து
னுபயப தாம்பு யங்க ளடைவேனோ

அருணையி லோங்குதுங்க சிகரக ராம்பு யங்க
ளமரர்கு ழாங்கு விந்து தொழவாழும்
அடியவர் பாங்க பண்டு புகலகி லாண்ட முண்ட
அபிநவ சார்ங்க கண்டன் மருகோனே

கருணைமிரு கேந்த்ர அன்ப ருடனுர கேந்த்ரர் சண்ட
கடவுள்ந டேந்த்ரர் மைந்த வரைசாடுங்
கலபக கேந்த்ர தந்த்ர அரசநி சேந்த்ர கந்த
கரகுலி சேந்த்ரர் தங்கள் பெருமாளே.

**பதவுரை**

அருணையில் ஓங்கு = திருவண்ணாமலையில் உயர்ந்து ஓங்கியதும், துங்க = பரிசுத்தமுடையதுமான, சிகர = கோபுரத்தில் உறைபவரே!

அமரர் குழாம்=தேவர்களின் கூட்டங்கள், கர அம்புயம் குவிந்து தொழ=தங்கள் தாமரையனைய கரங்களைக் குவித்துத் தொழ, வாழும்=வாழ்கின்ற, அடியவர் பாங்க=அடியார்களின் தோழரே! பண்டு புகல்=முன்னொரு காலத்தில் கணக்கிட்டுச் சொல்லப்பட்ட, அகில அண்டம் உண்ட=எல்லா அண்டங்களையும் உண்டவரும், அபிநவ=புதுமையானவரும், சார்ங்க கண்டன்=சார்ங்கம் என்ற வில்லையுடைய வீரரும் ஆகிய திருமாலின், மருகோனே=திருமருகரே! கருணை=கருணை மிகுந்த, ம்ருக இந்த்ர அன்பருடன்=விலங்கினத்தில் உயர்ந்தவரான வியாக்ரபாதரென்னும் அன்பருடன், உரக இந்த்ரர் கண்ட=நாக வேந்தராம் பதஞ்சலி தரிசித்த, கடவுள்=கடவுளாகிய, நட இந்த்ரர் மைந்த=நடராஜப் பெருமானுடைய புதல்வரே! வரை சாடும்=மலைகளைப் பொடியாக்கும், கலப=தோகையையுடைய, கக இந்த்ர=பறவைகளில் உயர்ந்த மயில் வாகனரே! தந்த்ர=ஆகம நூல்களில் வல்லவரே! அரச=தலைவரே! நிச இந்த்ர=உண்மையிற் சிறந்தவரே! கந்த=கந்தக் கடவுளே! கர குலிச இந்த்ரர் தங்கள்=கரத்தில் குலிசாயுதத்தை யேந்திய தேவேந்திரர்களுக்கு, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! இருவினை ஊண் பசும்பை=இரு வினைகளுக்கும் உறைவிடமான புதிய பையும், கருவிளை கூன்=கரு வளர்வதற்கு இடமான பாத்திரமும், குடம்பை=கூடுபோன்றதும், இடர் அடை பாழ் பொதும்பு=துன்பங்கள் அடைந்துள்ள பாழ்படுகின்ற குகையும், அகித வாரி இடைதிரி சோங்கு=துன்பக்கடலின் நடுவே திரிகின்ற கப்பலும், கந்த மது அது தேங்கு கும்பம்=இந்திரியங்களின் சுவை நிறைந்துள்ள குடமும், இரவு இடை தூங்குகின்ற பிணம்=இரவில் தூங்குகின்ற பிணம் போன்றதும், நோவுக்கு உரு இயல் பாண்டம்=நோய்களுக்கு வடிவாய் அமைந்த பாத்திரமும், அஞ்சு மருவிய பாண்டம்=ஐம்பூதங்களும் பொருந்திய கூடும், நெஞ்சொடு உயிர் போம் குரம்பை=மனத்துடன் உயிர் வெளியேறும் சிறு குடிலும், ஆகிய இந்த உடம்பு, அழியாது=அழியாமல் நிலைத்திருக்குமென்று, உலகு உடன் ஏன்று கொண்ட=உலகத்தாருடன் இசைந்துள்ள, கரும பிராந்து ஒழிந்து=வினையால் வரும் மயக்கம் ஒழிந்து, உன் உபய பத அம்புயங்கள் அடைவேனோ=தேவரீருடைய இரு பாத தாமரைகளைப் பெறுவேனோ?

## பொழிப்புரை

திருவண்ணாமலையில் ஓங்கி உயர்ந்துள்ள பரிசுத்தமான கோபுர வாயிலில வீற்றிருப்பவரே! கரமலர்களைக் குவித்துத் தேவ கூட்டம தொழ வாழ்கின்ற அடியவர் தோழரே! முன்னொரு காலத்தில் அளவு செய்து சொன்ன எல்லா அண்டங்களையும் உண்டவரும், புதுமை வாய்ந்தவரும், சார்ங்கவில்லையேந்திய வீரரும் ஆகிய திருமாலின் திருமருகரே! நிறைந்த

கருணையுடைய புலிக்கால் முனிவராகிய அன்பருடன், நாக ராஜராகிய பதஞ்சலி முனிவர் தரிசித்து மகிழ்ந்த இறைவரும், நடராஜருமாகிய சிவபிரானுடைய செல்வக் குமாரரே! மலைகளைத் தன் சிறைக் காற்றால் துகள் படுத்துவதும், தோகையை யுடையதும், பறவைகளில் சிறந்ததுமாகிய மயிலை வாகனமாக வுடையவரே! ஆகமங்களில் வல்லவரே! எல்லாவற்றுக்குந் தலைவரே! உண்மைப் பொருளாய் உயர்ந்தவரே! கந்தக் கடவுளே! வஜ்ராயுதத்தைக் கையில் ஏந்திய தேவேந்திரர்கள் போற்றும் பெருமிதமுடையவரே! இருவினைகளுக்கும் உறைவிடமான புதியவையும், கருவளர்வதற்கு இடமான பாத்திரமும், துன்பங்கள் அடைந்து பாழ்படும் குகையும், துன்பக் கடலின் நடுவில் திரிகின்ற மரக்கலமும், இந்திரியங்களில் சுவை நிறைந்துள்ள குடமும், இரவிலே தூங்குகின்ற பிணம் போன்றதும், நோய்களுக்கு உருவாய் அமைந்த பாத்திரமும், ஐம்பூதங்களும் பொருநதியுள்ள கூடும், மனத்துடன் உயிர் பிரிந்து போம் சிறு குடிலும், ஆகிய இந்தவுடம்பு அழியாமல் நிலைத்து நிற்கும் என்று உலகத்தாருடன் அடியேன் கொண்டுள்ள வினைப்பயனால் வரும் மயக்கம் ஒழிந்து உமது இருபாத தாமரைகளை அடையும் பேற்றினைப் பெறுவேனோ?

**விரிவுரை**

**இருவினையூண் பசும்பை :—**

நல்வினை தீவினை என்ற இருவினைகள் தம் பயனை நுகர்வதற்கு இடமானது இவ்வுடம்பு. புதியதாக அயன்படைத்துத் தந்தவை போன்றது.

பசும் பை என்ற சொல் புதுமையைத் தெரிவிக்கின்றது.

**கருவினை கூன் :—**

கரு வளர்வதற்கு இடமான பாத்திரம் இந்தவுடம்பு.

கூன் என்ற சொல் பாத்திரம் என்ற பொருளில் வந்தது.

"குருதி சாறெனப் பாய்வது குரைகடற் கூனில்"
—கம்பராமாயணம்—கிங்கரர் வதைப் படலம்.

**குடம்பை :—**

குடம்பை என்பது பறவை யுறைகின்ற கூடு.

குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு. —திருக்குறள்

மெய்ச்சோதி தங்கு சிறுகொள்ளி தன்னை
விறகின்மை கொண்ட குருகார்

கச்சோத மென்று கருதிக் குடம்பை
தனிலுய்த்து மாண்ட கதை போல். —கந்தபுராணம்.

**இடரடை பாழ் பொதும்பு :—**

எண்ணிலலாத துன்பங்கள் அடைந்து பாழ்படுகின்ற குழி.

பொதும்பு என்ற சொல் குழியென்றும், குகையென்றும் பொருள்படும்.

**அகித வாரியிடை திரி :—**

கிதம் (இதம்)—சுகம்: அகிதம்—சுகம் இல்லாமை. இல்லாமை. துன்பக் கடலின் நடுவில் திரிகின்ற மரக்கலம் போன்றது இவ்வுடம்பு. கடலில திரிகின்ற கப்பல் பாறையால் மோதப்பட்டுப் படார் என்று உடைந்துவிடும். அதுபோல் இந்தவுடம்பு கூற்றுவனாகிய பாறையால் மோதப்பட்டு ஒரு கணத்தில் அழியக் கூடியது.

"வேதம் ஓதிய குலாலனுர்
வனைய வெய்ய தடிகார னுனயமன்
வந்தடிக்கு மொரு மட்கலம்" —தாயுமானுர்.

**கந்தமதுவது தேங்கு கும்பம் :—**

இந்திரியங்களில சுவை தேங்குகின்ற குடம்.

இந்திரியங்கள் என்பன: மெய், வாய், கண், மூக்கு, செவி.

இவைகளில் ஒவ்வொன்றுக்கு ஒவ்வொரு சுவை. உடம்புக்கு இனிய காற்றிலும், மெதமென்ற படுக்கையிலும் சுவை; நாககுக்குச் சுவையில விருப்பம்; மூக்குக்கு நறுமணத்தில் சுவை; காதுக்கு இன்னிசையில் சுவை; இவ்வாறு ஐம்பொறிகளின் சுவை தேங்குகின்ற குடம் போன்றது இவ்வுடம்பு.

**இரவிடை தூங்குகின்ற பிணம் :—**

இரவு முழுவதும் தூங்கிக் காலத்தை அவமே கழிக்கின்ற அவலம் உள்ளது இந்தவுடம்பு. பிணம்போல் தூங்குவது.

அருளாளர்கள் தூக்கத்தைத் துறந்து, இறைவனுடைய தியான சமாதியில் நிற்பார்கள்.

"கட்டமுங் கழன்றேன் கவலைவிட் டொழிந்தேன்
கலக்கமுந் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமுங் கிழித்தேன் தூக்கமுந் துறந்தேன்
சாவையும் நோவையுந் தவிர்ந்தேன்" —திருவருட்பா.

இரவில் தூங்குவதேயன்றிப் பகலிலேயுந் தூங்குகின்றவர்களைப்பற்றி என்னென்றுரைப்பது ?

**நோவுக் குருவியல் பாண்டம் :—**

நோய்கள் யாவும் உருவெடுத்துத் தங்குகின்ற பாத்திரம்.

அரிசி பருப்பு முதலிய பண்டங்களைப் பாண்டங்களில் வைப்பதுபோல் இருமல் வலிவாதம் முதலிய நோய்கள் தங்குகின்ற இடம் இந்தவுடம்பு.

**அஞ்சு மருவிய கூண்டு :—**

மண், புனல், கனல், காற்று வெளி என்ற ஐந்து பூதங்கள் மருவிய கூடு போன்றது.

**நெஞ்சொடுயிர் குடிபோங் குரம்பை :—**

மனமும் உயிரும் குடியிருந்துவிட்டு திடீர் என்று பிரிந்து போய்விடும். ஆகவே அவைகள் விட்டுப் பிரிகின்ற சிறு வீடு இந்தவுடம்பு.

குரம்பை—சிறுகுடில்.

> "குரம்பை மலசலம் வழுவளு நிணமொடு
> எலும்பு அணிசரி தசையிரல் குடல்நெதி
> குலைந்த செயிர்மயிர் குருதியொ டிவைபல கசுமாலம்"
>
> —திருப்புகழ்

> "கள்ளப்புலக் குரம்பை கட்டழிக்க வல்லானே"
>
> —திருவாசகம்.

**அழியா தென்றுலகுடனேன்று கொண்ட கருமபிராந்து :—**

நீர்க்குமிழிபோல் தோன்றி விரைந்து அழியுந் தன்மையதாகிய வுடம்பு நெடுங்காலம் நிற்கக்கூடியதென்று உலகத்தார் அறிவின்மையால் நினைத்து மகிழ்ந்து காலத்தையவமே கழிப்பர். அவர்களுடன் அடியேனும் சேர்ந்து மயங்குகின்றேன். இந்த மயக்கம் ஒழியவேண்டும் என்று அடிகளார் முருகனிடம் முறையிடுகின்ருர்.

பிராந்து—பிராந்தி—மயக்கம்.

**உபய பதாம்புயங்க ளடைவேனே ? :—**

இறைவனுடைய இரு திருவடிகள் மயக்கத்தை யொழிக்கும் ஞானமயமானது.

ஒரு திருவடி கிரியா சக்தி மற்ரெரு திருவடி ஞானசக்தி.

**அருணையி லோங்குகின்ற சிகரம்:—**

அருணம்—சிவப்பு. சிவந்த நிறமாக விளங்குவதால் இம் மலை அருணாசலம் எனப் பேர் பெற்றது. அருணாசலம் என்ற சொல்லின் சுருக்கம் அருணை.

திருவண்ணாமலையில் வானளாவிய கோபுரங்கள் மிக அழகாகக் காட்சித் தருகின்றன. கிழக்கே முதலில் உள்ள கோபுரம் அருணகிரிநாதர் காலத்தில் வாழ்ந்த பிரபுட தேவராயர் புதுக்கியது.

அடுத்துள்ள கோபுரம் வல்லாள ராஜன் புதுக்கியது. இந்தக் கோபுரத்தின் வாயிலில் தென்புறத்தில் விநாயகரும், வடபுறத்தில் முருகரும் எழுந்தருளியுள்ளார்கள்.

**கராம்புயங்க ளமரர் குழாங்குவிந்து தொழ:—**

முருகவேள் சந்நிதியில் தேவர்களின் கரங்கள் தாமே குவிகின்றன.

குவிந்து—தன்வினை; குவித்து—பிறவினை. உள்ளத்தால் நினைத்துக் கரங்களைக் குவிப்பது. செயலற்ற நிலையில் தாமே கரங்கள் குவிகின்றன.

**"கரங்குவிவார் உள்மகிழுங் கோன் கழல்கள் வெல்க"**

—சிவபுராணம்.

**"கைகாள் கூப்பித் தொழீர்"** —அப்பர்

**அடியவர் பாங்க:—**

பாங்கன்—தோழன். பாங்கு—பக்கம். பக்கத்திலேயே இருந்து துணைபுரிவதனால் பாங்கன் எனப்பட்டனன்.

**அகிலாண்டமுண்ட:—**

திருமால் எல்லா உலகங்களையும் உண்டவர்.

**"ஆலமுண்டகோன் அகண்ட லோகமுண்ட மால்"**

—(தோலெலும்பு) திருப்புகழ்.

**கருணை மிருகேந்த்ர அன்பருட னுரகேந்தரர் கண்ட:—**

மழமுனிவர் என்பவர் தில்லையிலிருந்து சிவலிங்கம் அமைத்து வழிபாடு புரிந்துவந்தார். நாடோறும் அதிகாலையில் மரங்களில் ஏறி மலர் பறிக்கும்பொருட்டு புலிக்காலும், நகங்கள்தோறும் கண்களும் பெற்றார். அதனால் வியாக்ரபாதர் எனப் பேர்பெற்றார். அவர் வழிபட்ட சிவாலயம் திருப்புலீச்சுரம் எனப் பேர்பெற்றது. அவர் இருந்து வழிபாடு செய்ததனால்

சிதம்பரம் திருப்புலியூர்—பெரும்பற்றப் புலியூர் எனப் பேர் பெற்றது.

திருப்பாற்கடலில் ஆதிசேடன் மீது அறிதுயில் புரியும் திருமால் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தார். ஆதிசேடன் அவரைப் பணிந்து, ''ஆனந்தக் கண்ணீர் சொரிந்த காரணம் யாது?'' எனக் கேட்டார். ''தாருகவனத்தில் சிவபெருமான் ஆனந்த நடனம் புரிந்தார். அதனை அருகில் இருந்து தரிசித்தேன். அத் திருநடனத்தை நினைத்ததனால் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று'' என்றார்.

ஆதிசேடன் தானும் அந்த நடனத்தைத் தெரிசிக்க விரும்பினார். திருமாலின் கட்டளைப்படி. அத்திரி முனிவருக்கு மகனாகத் தோன்றிப் பதஞ்சலி என்ற நாமம் பெற்றார். இவர் தில்லை வனம் வந்து வியாக்கிரபாதருடன் இருந்து திருநடன தரிசனம் பெறவேண்டித் தவஞ் செய்தார். இவர் தனியே சிவலிங்கம் நிறுவி வழிபாடு புரிந்தார். அது அனந்தேச்சுரம் எனப் பேர்பெற்றது. இந்த மாதவர்களாகிய பதஞ்சலி, வியாக்கிரபாதர் பொருட்டு, தேவரும் மூவரும் தெரிசிக்க, தில்லைத் திருச்சிற்றம்பலத்தில் சிவபெருமான் தைப்பூசத்தன்று திருநடனம் புரிந்து அருள்புரிந்தார். இந்த அரிய வரலாற்றை இந்த ஒருவரியில் அருணகிரிநாதர் அழகாகக் கூறியருளினார்.

**நடேந்த்திரர் மைந்த:—**

சிவபெருமான் உலகம் உய்யத் திருநடனம் புரிகின்றார். இந்த நடனத்தால் ஆக்கல், அளித்தல், ஒடுக்கல், மறைத்தல், அருளல் என்ற ஐம்பெருந் தொழில்களும் நடைபெறுகின்றன.

**கலபக கேந்த்ர :—**

ககம்—பறவை. பறவைகளில் தலைசிறந்தது மயில். இது ஓம் என்ற பிரணவ வடிவானது. விஷபயத்தை விலக்கவல்லது. மயில் இந்தியாவுக்கு தேசியப் பறவையாக அமைந்த சிறப்பு உவகைக்குரியது.

**தந்த்ர :—**

தந்திரம்—ஆகமம்.

முருகனைப்பற்றிக் கூறும் ஆகமம். குமாரதந்திரம் எனப் பேர்பெறும். ஆகம நூல்களில் வல்லவர் முருகர்.

**நிசேந்த்ர :—**

நிசம்—உண்மை. மெய்ப்பொருளாக விளங்கும் விமலன் கந்தவேள்.

**கருத்துரை**

அருணைமேவும் அண்ணலே! புன்புலால் யாக்கையின் மயக்கந் தீர்ந்து உன் பதஞ்சேர அருள்வாய்.

# கற்பு

---

## செண்டம்மை

செண்டம்மாள் சென்னையில் கீழ்ப்பாக்கத்தில் வசித்து வந்தாள், அவளுடைய கணவனார் திரண்ட செல்வத்தையும் ஒரே புதல்வி பாக்கிய லட்சுமியையும் அவளிடம் ஒப்படைத்துவிட்டு அப்பன் திருவடியைச் சேர்ந்துவிட்டார். செண்டம்மாள் கணவனிடம் வாழ்ந்த காலம் ஐந்து ஆண்டுகள்தான். ஐந்து ஆண்டுகள் ஐந்து நாட்கள் போல் உருண்டு வேகமாக ஓடிவிட்டன. இளமையிலே கணவனையிழந்த செண்டம்மாள் திலகவதியாரைப் போல் தவவொழுக்கத்தில் நின்றாள். அவள் உடம்பில் மின்னிக் கொண்டிருந்த வைர அணிகள் யாவும் இரும்புப் பெட்டியில் உறங்கிக் கொண்டிருந்தன. அவள் கழுத்தில் பொடி உருத்திராட்ச ஜெபமாலை மட்டுமே இருந்து அழகு செய்தது.

கடவுள் கொடுத்த தன் புதல்வி பாக்கியலட்சுமியைக் கண்ணுங் கருத்துமாக வளர்த்து வந்தாள். விதம் விதமாக உடை உடுக்கச் செய்தும், மிக உயர்ந்த நவரத்தின அணிகலன்கள் பூட்டியும், இனியவுணவுகளை ஊட்டியும், அருமை பாராட்டி வளர்த்தாள். பாக்கியலட்சுமி கூரிய அறிவும், சிரிய பண்பும் படைத்து வளர்ந்தாள்.

செண்டம்மாள் ஒரு அழகிய நாயை வளர்த்துவந்தாள். வேளைக்கு அதைக் குளிப்பாட்டி உணவு தருவாள். பாக்கியலட்சுமிக்கு அதை தங்கை என்று முறை வைத்து மகிழ்வாள். "பாக்கியலட்சுமி! தங்கை எங்கே?" என்று கேட்பாள். "ஜின்னி! போய் அக்காளை அழைத்து வா" என்பாள். அது போய் பாக்கியலட்சுமியை அழைத்து வரும். அந்த நாய்க்குக் கூர்த்த அறிவு அமைந்திருந்தது. செண்டம்மாள் தன் கையால் உணவு தந்தால்தான் உண்ணும். அவள் தன் கணவனை நினைத்து சில சமயம் கண்ணீர் வடிப்பாள். அது அவளைப் பார்த்து ஏங்கி நிற்கும். செண்டம்மாள் சோமவாரத்தன்று ஒன்றும் உண்ணாமல் உபவாசமாக இருப்பாள். அதை உற்று நோக்கி அந்த அறிவுள்ள நாயும் அன்று ஒன்றையும் உண்ணாமல் உபவாசமாக இருக்கும். அவள் மாலையில் சிவாலயம் போகும்போது உடன் போகும். அவள் ஆலயத்தை மூன்று முறை வலமாக வரும்போது அதுவும் கூடவே சுற்றி வரும். செண்டம்மாளுக்கு அந்த நாயின் மீது அளவற்ற பாசம்.

ஒருநாள் செண்டம்மாள் கடைவீதிக்குச் சென்றிருந்தாள். தாயைக் காணாத நாய் வள் வள் என்று குரைத்துக் கொண்டிருந்தது. பாக்கியலட்சுமிக்குக் கோபம் வந்து ஒரு தடியை எடுத்து அதனை நையப் புடைத்துவிட்டாள். தொலைவில் வந்து கொண்டிருந்த செண்டம்மாள் அதைப் பார்த்து அலறிவிட்டாள். ஓடி வந்தாள். நாயைக் குழந்தைபோல் அணைத்துக் கொண்டாள். அதன் உடம்பைத் தன் தாமரை போன்ற மெல்லிய கரத்தால் தடவிக் கொடுத்தாள். தன் வாலையசைத்துக் கொண்டு அது வாடிய முகத்துடன் நின்றது.

"அம்மா! பாக்கியம்! நீ என்ன காரியம் செய்தாய்? உன் தங்கையை இப்படி அடிக்கலாமா? இது அறிவுள்ள பிராணியாயிற்றே. இதைப்போல அன்பும் பண்பும் உள்ள ஒரு பிராணி உண்டா? இதற்குள்ள நன்றி விசுவாசம் மனிதர்களுக்குக் கிடையாது அம்மா! என்னிடம் உதவி பெறுகின்றவர்கள் என்னை ஏசுகின்றார்கள். பன்முறை பணங்கொடுத்து ஒருமுறை யில்லையென்றால் உடனே அவர்களுக்குக் கோபமும் வருத்தமும் வந்துவிடுகின்றன. இவளுக்கென்ன கேடு ஒரே பெண்தானே. வேறு ஆண்பிள்ளைதான் இல்லையே? நிரம்பக் கொடுத்தால் என்ன? கோயிலுக்குங் குளத்துக்குங் கொடுக்கின்றாளே? ஏழையான எனக்குத் தந்தால் என்ன? 'கருமி. லோபி. என்கின்றார்கள். குழந்தாய். உன் சித்திக்கு வீடுகட்டிக் கொடுத்தேன். "ஏன் மேலே மாடி கட்டித் தரக்கூடாதா?" என்கின்றாள். உன் மாமனுக்கு வியாபாரத்துக்கு 25 ஆயிரங் கொடுத்தேன். அதனைத் தொலைத்துவிட்டு இன்னும் 25 ஆயிரங் கொடு என்று என்னை நச்சரிக்கின்றான். ஒரு பையனைப் படிக்க வைத்தால் வேலை வாங்கிக் கொடு என்கின்றான். வேலை வாங்கிக் கொடுத்தால் டெபாசிட்டுக் கட்டப் பணங் கேட்கின்றான். கல்யாணம் பண்ணி வை என்கின்றான். இப்படி சிலருக்கு இரக்க சிந்தை கொண்டு உதவினால் கடைசிவரை வேறு வேறு உதவி கேட்கின்றார்கள். இல்லையென்றால் முன் செய்தவற்றை யெல்லாம் மறந்து தூற்றுகின்றார்கள். அவர்கள் வைவதைப் பொருளாக நான் நினைக்கவில்லை. என்றாலும் அவர்கட்கு நன்றியுணர்வு இல்லையே யென்றுதான் வருந்துகின்றேன். உன் தந்தை தேடிவைத்த பொருளைக் கொண்டு நான் என்னால் முடிந்த அறங்களைச் செய்கின்றேன்.

"மகளே! ஒரு ஏழைக்கு நான் மாதந்தோறும் சிறு உதவி செய்து வந்தேன். உதவி பெற்றவர் 'மாதந்தோறும் வந்து பெற்றுக்கொள்வது சிரமமாக இருக்கின்றது. மூன்று வருடத்துக்கு என்ன தருவீரோ? அவற்றைச் சேர்த்து ஒரே தேதியில் தந்துவிடும்' என்று கேட்டார்' அப்படியுந் தந்தேன். அப்படிப் பெற்றுக் கொண்ட அவர் அப்புறம்

என் முகத்தில் விழிக்கவே யில்லை. எரிகின்ற வீட்டில் எடுத்தது லாபம் என்றபடி எத்தனைக்கு எத்தனை கேட்டுப்பெற முடியுமோ அப்படிப் பெற்றுவிட வேண்டும் என்று சிலர் கருதுகின்றார்கள்.

ஒருவருக்கு டிரான்சிஸ்டர் வாங்கித் தந்தேன். அது பழுதாகி விட்டது. அதனைப் பழுது பார்த்துத் தருமாறு திரும்ப என்னிடமே வந்து பாழது பார்த்துக் கொண்டு போனார். மொத்தத்தில் மனிதர்களில் மிகமிக ஒரு சிலரைத் தவிர பலர் நன்றி மறக்கின்றார்கள். சாப்பிட்ட கையுலர்வதற்குள் உணவு கொடுத்தவனை மறந்துவிடுகின்றார்கள். நன்றி மறப்பதுடன் நிற்கின்றார்களில்லை. உதவி புரிந்தவருக்குத் தீங்கும் செய்ய முற்படுகின்றார்கள். இது நன்றி கோறலாகும்.

இந்த நன்றி கொல்லும் பாவத்தைப் பலர் பால் பாயசமாகக் கருதுகின்றார்கள். வாழ்வு தந்தவர்கட்குத் தாழ்வு சூழ்கின்றார்கள். பால் வார்த்தால் பாம்பு நஞ்சைத் தருகின்றது. பாம்பு போன்ற மாக்கள் பலர் இருக்கின்றார்கள்.

இந்த நாய்க்கு நாம் என்ன செய்கின்றோம்? பணந் தந்தோமா? இல்லை, அணிகலந் தந்தோமா? இல்லை, ஆடை யளித்தோமா? இல்லை, உண்ட பின் எச்சிலன்னம் இடுகின்றோம். நம்மிடம் பாலும் தேனும் உண்டவன், "உன்னை விட்டேனா பார்" என்று தலையை யாட்டுகின்றான். எச்சிலன்னம் உண்ட நாய் நன்றியறிவுடன் வாலையசைக்கின்றது. நாயைவிட மனிதன் பல மடங்கு தாழ்ந்திருக்கின்றான்.

என் அன்புள்ள செல்வமே! ஒரு ஊரில் கோடீச்சுரன் ஒருவன் வாழ்ந்தான். அவனிடம் ஒரு நாய் வளர்ந்தது. அது மிகுந்த விசுவாசமுள்ளது. எஜமான் எங்கு சென்றாலும் உடன் சென்று காவல் காத்து உதவி செய்யும். எஜமானிடம் மிகுந்த எச்சரிக்கையாக இருந்து வந்தது.

ஒரு நாள் கோடீச்சுரன் குதிரைமீது அயலூர் சென்றான். அன்புள்ள நாயும் உடன் சென்றது. தனவந்தன் தனக்கு வரவேண்டிய பணங்களை வசூலித்தான். ஒரு வலைப்பையில் இட்டுக் கட்டிக் குதிரை மீது ஏறித் தன் ஊரை நோக்கிப் புறப்பட்டான். கடும் வெய்யில். நீர் விடாயால் களைத்தான். வழியில் ஒரு தாமரைக்குளம். குதிரையை விட்டிறங்கி குளத்தில் நீர் பருகினான். அயர்ச்சியால் சிறிது படுப்போம் என்று எண்ணினான். பணப் பையை இறக்கி குளக்கரையில் உள்ள ஆலமரத்தின் நிழலில் பணப் பையைத் தலைக்கு வைத்துச் சிறிது கண்ணுறங்கினான். நன்கு தூங்கிவிட்டான். பொழுது சாய்ந்து விட்டது. விழித்துக் கொண்டான். "ஐயோ! அதிகந் தூங்கிவிட்டோமே? இன்னும் 7 மைல் போகவேணுமே? பணம் கொண்டு

போகின்றோமே? வழியில் கள்ளர் பயம் இருக்குமே? தூக்கத்தால் ஏக்கம் வந்ததே" என்று எண்ணிப் பதறினன். துண்டை உதறினன். குதிரைமீது ஏறிப் புறப்பட்டான்: எதற்காக அவசரப்பட்டானே அதை மறந்துவிட்டான். பணப் பையை எடுக்காமலேயே போகின்ருன். குதிரையைச் சவுக்கால் அடித்து முடுக்கினன்.

அறிவுள்ள நாய் பதறியது. "ஐயோ! நமது தலைவன் பணப் பையை மறந்துவிட்டுப் போகின்ருனே? என் செய்வது?" என்று எண்ணி ஏங்கியது. வாயில்லாத பிராணி. மிக்க வேகமாக ஓடி குதிரைக்கு முன் சென்று குரைத்துக் குறுக்கிட்டுத் தடுத்தது. கோடீச்சுரன், நாய் ஏதோ விளையாடுகின்றது என்று எண்ணி சவுக்கால் அடித்தான். நாய் பணப் பையை யாராவது அபகரிப்பார்களோ என்று அஞ்சி குடல் தெறிக்க ஓடிப் பணப் பையைப் பார்த்தது. பணப் பை அப்படியே கிடந்தது. அதனைக் கண்டு மகிழ்ச்சியுடன் ஓடி எஜமானை மறித்துக் குரைத்தது. மறுபடியும் அவன் சவுக்கால் அடித்து அதனை விலக்கினன். நாய் மீளவும் பணப் பையைப் பார்த்துவிட்டு ஒரே ஓட்டமாக ஓடி அவனைத் தடுத்தது. வாயில்லாததால் சொல்ல முடியாமல் தவித்தது. இவ்வாறு பலமுறை அங்குமிங்கும் ஓடித் தடுத்ததைக் கண்ட கோடீச்சுரனுக்குக் கோபம் மூண்டது. நான் பணப் பையுடன் போகின்றேன். இருட்டுவதற்குள் ஊர் போய்ச் சேர வேண்டும். இந்த நாய் சமய சந்தர்ப்பம் தெரியாமல் என்னைப் போக ஒட்டாமல் தடுத்து விளையாடுகின்றதே. இதற்குப் பயித்தியம் பிடித்திருக்க வேண்டும் என்று எண்ணி ரிவால்வரை எடுத்துச் சுட்டுவிட்டான். நாய் குடல் சரிய ஓடி பணப் பையின்மீது தலைவைத்துக் கொண்டு, பணப்பை எஜமானிடம் சேர வேண்டுமே யென்ற கவலையுடன், சொருகிய கண்ணுல் எஜமானன் வருவானு என்று பார்த்துக் கொண்டு, வலியைப் பொறுத்துக் கொண்டிருந்தது.

வீட்டுக்குச் சென்றதும் குதிரையை விட்டிறங்கிப் பார்த்தான். பணப்பை யில்லை. நெருப்பை மிதித்தவன் போல் அலறினன். 'ஆ! என் அறிவுள்ள நாய் இதனால்தான் தடுத்தது போலும். மூடனுகிய நான் சுட்டுவிட்டேனே. அந்தோ கெட்டேன். என்னைப்போல் அறிவற்ற மூடன் உண்டா? என் அன்புள்ள நாயைக் கொன்றுவிட்டேனே. இந்தப் பாவத்துக்கு என் செய்வேன்" என்று தன்னைத்தானே நொந்து கொண்டான். குதிரைமீது ஏறி வாயுவேகம் மனோவேகமாகப் பறந்து சென்ருன். பணப் பையை வைத்த குளத்தடியைச் சேர்ந்தான். தொலைவில் எஜமானனைப் பார்த்ததும் நாயின் உள்ளம் உவகையுற்றது. உடையவனிடம் உடைமை சேர்ந்துவிடும் என்று மனத்தில் சாந்தி யேற்பட்டது. எஜமானன் அருகில் வந்தவுடன் கண்ணை மூடிவிட்டது.

தன்னைப் பார்த்தவுடன் கண்களை மூடி உயிர் துறந்த நாயைக் கண்டு கதறி யழுதான். "என் அறிவுள்ள பிராணியே! நான் உன்னைச் சுட்ட பின்னும் நீ என் பணப் பையை மற்றவர் கவராவண்ணம் அதன்மீது தலைவைத்து என் வரவை நோக்கி, ஓடுகின்ற உயிரைத் தடுத்து நிறுத்தி வைத்து, என்னைக் கண்டவுடன் உயிர் துறந்தனையே. ஐயோ! உனக்குள்ள நன்றிக்கடன் ஆறறிவுபடைத்த மனிதனுக்கு இம்மியளவும் கிடையாதே. இனி எக்காலத்தில் உன்னைக் காண்பேன்" என்று கூறி அதனைத் தழுவி யழுதான். "தெய்வமே! நான் அவசரத்தாலும் அறியாமையாலும் செய்த இப்பெரும் பிழையைப் பொறுத்தருள்" என்று தொழுதான். அவன் மனம் ஆறாத் துயரம் அடைந்தது.

அழுது என்ன பயன்? மாண்ட நாய் மீண்டு எழுமா? எழாது. நாயைப் புதைத்து அதன்மீது சிறு சிகரம் புதுக்கினான்.

ஆதலால் பாக்கியலட்சுமி! நாய்க்குள்ள நன்றியுணர்வு வேறு யாருக்கும் கிடையாது. நாயை நீ அடித்தது பெரும்பிழை" என்று கூறி மகளைக் கண்டித்தாள்.

பாக்கியலட்சுமி செண்டம்மாளின் செஞ்சொல்லைக் கேட்டு, "அம்மா! என்னை மன்னித்துவிடு. நாயை இனி ஒருபோதும் நான் அடிக்க மாட்டேன்" என்றாள்.

உரிய காலம் வந்தவுடன் நல்ல மணமகனுக்குப் பாக்கியலட்சுமியைத் திருமணம் செய்து கொடுத்தாள்.

மருமகனுக்குச் சகல உபசாரங்களையுஞ் செய்தாள். ஒரு பெரிய சுமைபிறங்கியது போல ஆறுதல் அடைந்தாள். மகளும் மருகனும் வாழ்கின்ற இன்ப வாழ்வைக் கண்டு பெருமகிழ்ச்சி யுற்றாள்.

தன் உடைமைகளை நான்காகப் பிரித்தாள். மகளுக்கு ஒரு கூறு; மருமகனுக்கு ஒரு கூறு; அறப்பணிக்கு ஒரு கூறு, தனக்கு ஒரு கூறு என்று பிரிவுகள் செய்து வைத்தாள்.

பலப்பல அறப்பணிகளைச் செய்தாள். காலாந்தரத்தில் அவள் ஆன்மா இறைவன் திருவடியைச் சேர்ந்தது.

பாக்கியலட்சுமி தன் தாயின் பிரிவுத் துயரைத் தாங்காமல் பெரிதும் வருந்தினாள். தாயாருடைய அந்தரங்கப் பெட்டியில் ஒரு உயில் இருந்தது. அந்த உயிலை எடுத்துப் படித்தாள். அதில் அடியிற் கண்ட வாசகங்கள் இருந்தன.

"சிதம்பரநாதன் மனைவியாகிய செண்டம்மாள் என்ற நான் சுய உணர்வுடன் எழுதி வைத்த உயில் என்னவென்றால், நான் பலப்பல

உ

முருகா

# மகாபாரதம்

---

## சாந்தி பர்வம்

### மோக்ஷ தர்மம்

(216-ஆம் பக்கத் தொடர்ச்சி)

யுதிஷ்டிரர், "பிதாமகரே ! எதனுல் சுகம் கிடைக்கின்றது? எதனுல் துக்கம் வருகின்றது? இதனைக் கூறும்" என்று கேட்டார்.

பீஷ்மர், "தருமநந்தனு! எவன் அடக்கம் உள்ளவனே அவன் சுகமடைகின்றான். அடக்கமில்லாதவன் துக்கமடைகின்றான்.

அடக்கமுள்ளவன் கடைப்பிடிக்க வேண்டிய குணங்கள் கோப மில்லாமை, பரபரப்பில்லாமை, மகிழ்ச்சி, முயற்சி, சினமில்லாமை, நேர்மை, அதிகம் பேசாமை, கர்வமில்லாமை, பெரியோர்களைப் பூசிப்பது, பொறுமையில்லாமை, ஜீவகாருண்யம், கோள் சொல் லாமை. ஊர்வம்பு பேசாமை, தற்புகழ்ச்சி யில்லாமை, பர நிந்தை

---

உறவினர்கட்கும் நண்பர்கட்கும் உதவி செய்தேன். ஆனுல் என்னிடம் ஓரிருவரைத் தவிர மற்ற யாவரும் நன்றி பாராட்டவில்லை. பாராட் டாதது மட்டுமன்று. நிரம்பச் செய்யவில்லையே என்று நிந்தனையும் செய்தார்கள். ஆனுல் நாய் ஒன்றுதான் என்னிடம் ஒரு துளிகூட் அன்பு மாறுமல் அன்பு செய்தது. ஆதலால் என் உடைமைகளிலிருந்து வரும் ஊதியத்தைக் கொண்டு நாய்களுக்கு நல்லுணவு தரவேண் டியது. இவ்வாறு இந்த நல்லறத்தைச் செய்துவர, என் மகளையும் மருமகனையும் அறங்காவலராக நியமித்துள்ளேன். இப்படிக்கு நான் நல்ல எண்ணத்துடன் எழுதி வைத்துள்ள உயில் சாசனம்.

இப்படிக்கு

செண்டம்மாள்."

இதனைப் படித்துப் பார்த்த பாக்கியலட்சுமி அதிசயம் அடைந் தாள்.

தாய் எழுத்தின்படி நாய்த் தருமத்தை நல்லெண்ணத்துடன் செய்து வந்தாள்.

கூருமை இவைகள் சாதுக்கள் வழி. இவைகளுக்கு மாறுபட்டவை தீயவர்களின் வழி'' என்று கூறினர்.

''பாரத! காலையுணவுக்கும் மாலையுணவுக்கும் இடையில் உண்ணு தவன் எப்பொழுதும் உபவாசம் இருப்பவன் என்று அறி; ருது காலம் இன்றி மற்றக்காலத்தில் மனைவியை மருவாதவன் நித்திய பிரம்மசாரியாகின்முன். அதிதிகட்கு அன்னமளிக்காமல் உண்பவன் நஞ்சையுண்ணுகின்றவனுகின்முன். அதிதிகட்கு அளித்து மிகுதிப் பட்ட வுணவை உண்ணுபவன் அமுதத்தை உண்ணுபவன் ஆகின்முன்'' என்று கூறினர்.

யுதிஷ்டிரர், ''ஐயனே! சரித்திரங்கள் பலவிதமாக இருக்கின்றன. சில நூல்கள் ஒன்றுக் கொன்று முரண்படுகின்றன. நான் எதைப் பின்பற்றுவது'' என்று கேட்டார். பீஷ்மர் கூறுவாராயினர்.

### ஸநத்குமாரருடைய உபதேசம்

''இமயமலைச் சாரலில் ஆருயிரம் முனிவர்கள் ஒரு சமயம் கூடி யிருந்தார்கள். அவர்களில் சிலர் உலகத்தை நிலையுள்ள தென்றும், சிலர் நிலையில்லாத தென்றும், சிலர் கடவுள் இல்லை யென்றும், சிலர் இயற்கை யென்றும் வாதிட்டார்கள். அவர்களின் வாதம் ஓய்ந்த பாடில்லை. வாதம் முற்றியது. வசிஷ்டரைப் பார்த்து ''உண்மையை உபதேசிக்க வேண்டும்'' என்று கேட்டார்கள். வசிஷ்டர் ''அறிகின் றேனில்லை'' என்முர். நாரதரை வினவினர்கள். அவரும் கையை விரித்துவிட்டார்.

''ஸநத்குமாரரிடம் செல்லுங்கள்'' என்று வானெலி எழுந்தது. எல்லோரும் இமயத்தின் உச்சியிலிருக்கும் வேத முடிவைக் கண்ட சநத்குமாரரைக் கண்டு, அஞ்சலி செய்து நின்முர்கள்.

சநத்குமாரர் முனிவர்களுக்குத் தத்துவ ஞானத்தை உபதேசித் தார். பரமாத்மாவை யடையும் நெறியை விளக்கியருளினர்'' என்முர்.

## பிரஹலாதனும் இந்திரனும்

### ஞானமே மோட்ச சாதனம்

யுதிஷ்டிரர் ''பரமஞான மூர்த்தியே! சுகமும் துக்கமும் அவரவர் கள் செய்யுங் கர்மங்களால் வருகின்றன. அந்தக்கர்மங்களுக்கு உண்மையில் மனிதன் கர்த்தாவாகின்முனு, இல்லையா என்பது சந்தேகம். இதனை விளக்க. வேண்டுகின்றேன்'' என்முர். பீஷ்மர் கூறுகின்முர்.

"யுதிஷ்டிர! இரணியனுடைய புதல்வர் பிரகலாதர். அவர் சிறந்த புண்ணிய புருஷர்; பற்றிலாதவர்; பாவங்களை விலக்கியவர்; சோம்பலில்லாதவர்; பலகலைகளில் வல்லவர்; அகங்காரம் இல்லாதவர்; சத்துவ குணமுள்ளவர்; புலன்களை வென்றவர்; இகழ்ச்சியையும், புகழ்ச்சியையும் சமமாகக் கொண்டவர்; அடக்கமுள்ளவர்; சராசரங்களின் பிறப்பையும் இறப்பையும் அறிந்தவர்; வெறுப்பும் விருப்பும் இல்லாதவர்; சினமும் மனமும் அற்றவர்; பொன்னையும் மண்ணையும் ஒன்ருகப் பார்ப்பவர்; உறுதியுள்ளவர்; உயிர்களுக்கு முன்னும் பின்னும் உள்ளதையறிந்தவர்; வாசுதேவர் திருவடியில் உள்ளம் வைத்தவர்; உயிர்களுக்கு நன்மையே புரிபவர்; பரமபாகவதர்; அன்புள்ளவர்.

இவர் ஒரு சமயம் ஒருவரும் இல்லாத இடத்தில் அமர்ந்திருந்தார். இவருடைய சிறந்த குணங்களைக் கண்ட இந்திரன் ஆச்சர்யம் அடைந்தான். அவருடைய தன்மையை அறிய விரும்பி அவரிடம் வந்து சொல்லத் தொடங்கினுன்.

"பிரகலாதரே! நற்குணங்கள் யாவும் உம்மிடத்தில் நிலைபெற்றிருப்பதைக் காண்கின்றேன். ஆனுல் உமது புத்தி சிறு குழந்தைகளுக்கு ஒப்பாகக் காணப்படுகின்றது. ஆத்மாவை அறிந்துகொண்டிருக்கும் நீர் எதை உறுதி யென்று நினைக்கின்றீர்? நீர் பதவியிலிருந்து விலகியும் சோகப்படவேண்டிய நிலைமையிருந்தும் சோகப்படாமல் இருக்கின்றீரே? நீர் அறிவின் திறத்தாலோ அல்லது தைரியத்தாலோ மகிழ்ச்சியாக இருக்கின்றீர்?" என்று வினவினுன்.

பிரகலாதர், "தேவர் கோமானே! பிறவிருத்தியையும் நிவிருத்தியையும் அறியாததனுல் ஒருவன் துக்கப்படுகின்ருன். இதனையறிந்தவன் துக்கப்படமாட்டான். நாராயணர் எல்லா உயிர்களையும் காத்து அருள் புரிகின்ருர். நம் செயலால் ஒன்றும் நடைபெறுவதில்லை. எல்லாம் நாராயணனுடைய செயல். முயற்சி செய்கின்றவர்களுக்கு வேண்டியது வருவதில்லை; வேண்டாதது வருகின்றதைப்பார்க்கின்ருேம். சமர்த்தில்லாதவன் செல்வனுக விளங்குகின்ருன். சமர்த்தன் அவனிடம் எதிர்பார்த்து நிற்கின்ருன். எல்லாம் இயற்கையால் நடைபெறுகின்றன.

ஆத்மாவையும் பரமாத்மாவையும் அறிந்து, எல்லாம் பரமாத்மாவின் திருவருளின்படி நடைபெறும் என்ற உறுதியேற்பட்டிருப்பதனுல் நான் துயரப்படாமல் இருக்கின்றேன். இவ்வுலகனைத்தும் முடிவுள்ளதாகும். ஆசையும் நான் என்ற செருக்கும் பந்தமும் அற்ற நான் விலகியிருக்கின்றேன். சங்கல்ப விகல்பம் இன்றி நான் சதா பிரம்மத்தையே பார்த்துக்கொண்டிருக்கின்றேன். எனக்குக் காரணத்திலும் காரியத்திலும் விருப்புமில்லை; வெறுப்புமில்லை

எனக்குப் பகைவனே இல்லை. விண்ணையும் மண்ணையும் நான் விரும்ப வில்லை. அதனால் சதா மகிழ்ச்சியுடன் இருக்கின்றேன்'' என்றார்.

இந்திரன், ''திதியின் குலமணியே! உமக்கு இந்த அறிவு எந்த உபாயத்தால் வந்தது? அந்த உபாயத்தை எனக்குச் சொல்லும்'' என்று கேட்டான்.

பிரகலாதர் ''சுரபதியே! விஷ்ணு பக்தியாலும், குருவின் கருணை யாலும் எனக்கு சாந்தி கிடைத்தது. சாதுக்களின் உறவு இன்றி யமையாதது. நல்லாரிணக்கம் எல்லா நலன்களையும் நல்கும். ஞானமில்லாத ஒருவன் சாத்திரங்களை விரும்பிக் கேட்கமாட்டான். எல்லாம் தன் முயற்சியினாலேயே கிடைக்கின்றன என்று அபிமான மும் அகங்காரமுங் கொண்டு, சம்சாரக் கயிற்றால் கட்டுண்டு பிறவித் துன்பத்தையடைகின்றான். ஆதலால் தன்னையுந் தலைவனையும் அறிந்து எல்லாவற்றையும் ஒன்றாகப்பார்க்கின்றான். இதுதான் உபாயம். வாசுதேவரே எல்லா ஞானத்தையும் எனக்கு அளித்தார். ''உலகில் நான் இருக்கின்றேன். என்னில் உலக மில்லை'' என்று கூறினார். இந்திரன் அவருடைய நல்லுரைகளைக் கேட்டு ஆச்சர்ய மடைந்தான். பிரகலாதரைப் போற்றிப் புகழ்ந்து அவரிடம் விடை பெற்று விண்ணுலகஞ் சென்றான்'' என்றார்.

## இந்திரனும் பலியும்

### காலத்தின் வலிமை

யுதிஷ்டிரர். ''காலதண்டத்தால் செல்வத்திலிருந்து விலகிய அரசன் எந்த அறிவுடன் வாழ வேண்டும் என்பதை எனக்குக் கூறவேண்டும்'' என்று பீஷ்மரைக் கேட்டார்.

பீஷ்மர், ''அப்பா! இது பற்றி முன் நடந்த ஒரு நிகழ்ச்சியை நவில்கின்றேன். மகாபலிச் சக்கரவர்த்தி தன் பதவி செல்வம் இவை களை விட்டு விலகிவிட்டான். இந்திரன் எல்லா அசுரர்களையும் வென்ற பின் சிறந்த செல்வத்துள் வாழ்ந்தான். ஒருநாள் இந்திரன் சத்திய லோகஞ் சென்று பிரம்ம தேவரை வணங்கினான். ''வேத முதல்வரே! எவன் தானம் செய்யும்போது ஒருகாலும் பொருள் குறைந்த தில்லையோ அந்தப் பலியை நான் அறியவில்லை. பலி சூரியனைப் போலவும் சந்திரனைப் போலவும் விளங்கினான். உலகமெலாம் பெரும் புகழ்பெற்ற பலி எங்கே?'' என்று கேட்டான்.

பிரம்மதேவர் ''இந்திரனே! அளவற்ற தான தருமங்களைச் செய்த பலியைப் பற்றி நீ கேட்பது அழகன்று. ஆனால் நீ கேட்கும்

போது நான் பொய் சொல்லக் கூடாது. அவன் பூவுலகிலே பாழும் வீட்டில் கழுதை வடிவில் இருக்கின்றான்'' என்றார்.

இந்திரன் "பெருமானே! அவனை நான் கொல்லட்டுமா?'' என்று கேட்டான். நான்முகக் கடவுள் "இந்திரனே! அவன் கொல்லத்தக்க வனல்லன். அவனைக் கொல்லாதே'' என்றார்.

இந்திரன் ஐராவதம் என்ற வெள்ளை யானைமீது ஏறிக்கொண்டு பூதலத்தில் பாழும் வீட்டில் கழுதையுருவத்தை யெடுத்துக் கொண் டிருக்கின்ற பலியைச் சந்தித்தான்

"ஏ பலியே! நீ கழுதை வடிவில் உமியைத் தின்று கொண்டு இருக்கின்றனையே? இது உனக்கு ஏற்றதன்று. அந்தோ! நீ ஒரு காலத் தில் மூன்று உலகங்கட்கும் முதல்வனாக இருந்தனையே; உன் அரண் மனையில் ஆயிரங் கந்தர்வர்களும், ஆயிரக்கணக்கான தேவமாதர்களும் சதா நடனஞ் செய்து கொண்டிருந்தார்களே! ஆயிரம் லட்சம் பசுக் களை தானஞ் செய்தனையே. * சம்மை என்ற தடியை எறிந்து நீ இந்தப் பூமி முழுவதும் யாகங்கள் செய்தனையே? திசைபாலகர்கள் உன்னை இசைபாடித் துதிக்க, கொற்ற வெண்குடையின் கீழே நீ விளங்கிக் கொண்டிருந்தனையே? உன் பெருமை முழுவதும் நீங்கி நீ இப்படி அவலநிலையை யடைந்தனையே. உன் குடையைக் காணேன்; நவமணிகள் இழைத்த தங்கப் பாத்திரங்களைக் காணேன்; வெண் சாமரைகளைக் காணேன்; கழுதை உருவில் கண்டேன். இப்பொழுது உன் மனம் துயரப்படுகின்றதா? அல்லது துயரப்படாமல் இருக் கின்றதா?'' என்று கேட்டான்.

பலி "தேவர் கோமானே! உன் அறியாமைக்கு நான் வருந்து கின்றேன். இப்படிப் பேசுவது உனக்குப் பெருந்தன்மையாகாது. நீ கர்வத்தினால் கவரப்பட்டுப் பேசுகின்றாய். வீண் கர்வங்கொள்ளாதே. ஞானமும் பொறுமையும் உள்ள அறிஞர்கள் எந்தக் காலத்திலும் கவலைப்பட மாட்டார்கள். காலம் வலிமையானது. எல்லாம் காலஞ் செய்யுங்கோலம். காலத்தினால் யாவும் வரும்; போகும். நாம் அனை வரும் உலகங்களும் காலத்தால் அடங்குகின்றோம். நான் கழுதை யுருவில் மகிழ்ச்சியாக இருக்கின்றேன். அறிவுள்ள எனக்குத் துன்பம் ஏது? பெருஞ் செல்வத்தைக் கண்டும் பெரும்பதவியைக் கண்டும் இன்பம் எய்தாதவன் துன்பத்துள் துன்பம் எய்தமாட்டான். காலத் தின் கோலத்தால் வலிந்தவன் மெலிந்தவனாவான். மெலிந்தவன் வலிந்தவனாவான். அடிக்கப்பட்டவன் அடித்தானை அடிப்பான்.

---

* சம்மை. அடி பருத்து நுனி சிறுத்து 36 அங்குலமுள்ள தடிக்கு சம்மை என்று பெயர். இதனை வலிமையாளன் எறிய. அது விழுந்த தூரம் வரை யாககுண்டம் அமைத்து யாகம் புரிதல்.

அடித்தவனே பிறகு அடிபடுவான். நான் காலத்தால் கட்டுப்பட்டு இருக்கின்றேன். நான் ஒதுங்கி வந்து கழுதை யுருவத்துடன் உமியைத் தின்று கொண்டிருக்கின்றேன். நீ என்னைக் கண்டுபிடித்து என்னிடம் வந்து நிந்தை பேசுகின்றாய்.

ஒரு காலத்தில் என்னைக் கண்டு நீ நடுங்கி ஒடுங்கி யிருந்தாய். காலம் எல்லாவற்றையுங் கொடுக்கின்றது; மறுபடியும் காலம் எல்லாவற்றையும் எடுத்துக் கொள்ளுகின்றது. நான் மூவுலகங்கட்குந் தலைவனாக இருந்தேன். இப்போது காலத்தால் தள்ளப்பட்டேன். நான் இதுபற்றி சோகப்படவில்லை. என் மனம் மகிழ்ச்சியாக இருக்கின்றது.

அழகுள்ள ஒருத்தி ஏழையாக இருக்கின்றாள். அவலட்சணமுள்ள ஒருத்தி செல்வத்தில் திளைக்கின்றாள். மூடன் அரசாளுகின்றான். அறிஞன் அவனிடம் கைகட்டி நிற்கின்றான். இவைகட்குக் காரணம் காலந்தான். செல்வம் வருவதற்கும் போவதற்குங் காரணம் காலந்தான்.

உன்னை ஒரு குத்தால் குத்தி வீழ்த்துவேன். ஆனால் இப்போது எனக்குக் காலம் இல்லை. நான் அள்ளி அள்ளி வழங்கினேன். நான் செய்யாத தானமில்லை; நான் செய்யாத வேள்வியில்லை. உலகநாதனாக ஒளி செய்து கொண்டிருந்தேன். இப்போது காலத்தால் எல்லாம் இழந்து இருக்கின்றேன். இது பற்றி நான் வருந்தவில்லை. காலம் வரும்போது நான் பழைய நிலைமையை யடைவேன். உன்னைப் போன்ற வன்மை படைத்த எண்ணில்லாத இந்திரர்கள் காலஞ் சென்றார்கள். காலம் வரும்போது வாழ்வு பெற்ற நீயும் தாழ்வு பெறுவாய். காலத்தை எவராலும் வெல்ல முடியாது.

இந்திரனே! அகங்காரத்தை விடு. நான் முன்னிருந்த நிலையில் நீ இப்போது இருக்கின்றாய். திரும்பவும் இப்போது நான் இருக்கும் நிலையை நீ அடைவாய்; ஐயமில்லை. காலம் நன்றாக இல்லாதபோது அவன் எத்துணைச் சமர்த்தனாக இருந்தாலும் தாழ்ந்து போவான். காலத்தால் உன்னை நான் வென்றேன். இப்போது காலத்தால் உன்னால் வெல்லப்பட்டேன். பதவி நிலைத்ததன்று.

இலட்சுமி ஒருவனிடம் நிலைத்து இருப்பதில்லை. என்பால் இருந்த லட்சுமி இப்போது உன்பால் அடைந்திருக்கிறாள். பிறகு உன்னிடமிருந்து விலகி வேறொருவனிடம் அடைவாள். இந்த வுலகில் வாழ்ந்தவர்கள் எண்ணற்றவர்கள். பிருது, ஐலன், என் பாட்டனாகிய பிரகலாதன், என் தந்தையான விரோசனன். மது இரணியன், விசுவ ஜித்து, தட்சன், சுகோத்திரன் முதலிய பலர் பெருமிதத்துடன் அரசு புரிந்து காலத்தால் தள்ளப்பட்டார்கள். நீ மட்டும் நூறு யாகஞ் செய்தவனன்று. உன்னைப் போல் நூறு யாகங்களைச் செய்தவர்கள்

பலர். வானில் உலாவினார்கள். உலகத்தை வசஞ் செய்தார்கள். தானதருமஞ் செய்தார்கள். ஆதித்தனைப் போல் விளங்கினார்கள். அவர்கள் இன்று மறைந்துவிட்டார்கள். நீ மகிழ்ச்சி யடையாதே. நான் உன்னையும் உலகங்களையும் வென்றதை நீ அறிவாய். லாபம் நஷ்டம் சுகம் துக்கம், பிறப்பு இறப்பு முதலிய யாவும் காலத்தால் வருகின்றன. காலத்தின் தன்மையை யறிந்தவன் கவலைப்படமாட்டான். ஆதலால் நான் ஒரு சிறிதும் துன்பமின்றி சாந்தியுடன் இருக்கின்றேன்'' என்றான்.

இந்தப் பொருள் பொதிந்த புனித வசனங்கேட்டு இந்திரன் மகிழ்ச்சி யடைந்தான். பலியைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினான். "ஏ பலிச் சக்கரவர்த்தியே! உன்னைப்போல் துன்பத்தில் இன்புறுகின்ற ஒருவனை நான் கண்டதில்லை. உன் அறிவு புகழத்தக்கது. நீ உத்தம குணங்களை யுடையவன். உண்மையை யுணர்ந்தவன். காலந்தான் எல்லாவற்றுக்குங் காரணம். மாமியால் துன்புற்ற மருமகள், பின்னர் காலம் வந்தபோது மாமியைக் கட்டளையிட்டு ஏவல் புரியச் செய்கின்றாள். பொற்பாத்திரத்தில் உண்டவன் மண் பாத்திரமும் இன்றி வருந்துகின்றான். தேரில் சென்றவன் பாரில் நடக்கின்றான். குடையில் நின்றவள் வெயிலில் வேதனைப் படுகின்றாள். நான் உன்மீது இரக்கப்படுகின்றேன். உனக்கு நல்ல காலம் வரும்'' என்றான்.

### லட்சுமி

அப்போது பலியின் உடம்பிலிருந்து ஒளியுள்ள ஒரு பெண் வெளிப்பட்டாள். அவளைப் பார்த்து அமரர் கோமான் "நீ யார்?" என்று கேட்டான்.

"இந்திரனே! நான் மகாலட்சுமி. நான் சத்தியம், தைரியம், ஒழுக்கம், சீலம் உள்ள இடத்தில் இருப்பவள். நான் பலியிடம் தங்கியிருந்தேன். பலி அகங்காரம் அடைந்தான். அதனால் நான் அவனை விட்டு உன்பால் அடைந்தேன்'' என்றாள்.

இந்திரன் பலியினிடம் விடைபெற்றுக் கொண்டு விண் வழி சென்றான்.

### லட்சுமி இருக்கும் காரணம்

"யுதிஷ்டிர! மகாலட்சுமி எங்கு வசிக்கின்றாள்; எங்கு வசிக்கமாட்டாள் என்பதை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

ஒரு சமயம் தேவ முனிவராகிய நாரதர் புனிதமான கங்கையில் நீராடி அதன் கரையில் அமர்ந்து தவஞ் செய்து கொண்டிருந்தார்.

அங்கு இந்திரன் வந்தான். இருவரும் இன்னுரை கூறி காலைக் கதிர வனை வணங்கினார்கள். அப்போது அங்கு ஒரு ஒளி தோன்றியது. இரு வரும் அதிசயத்துடன் பார்த்தார்கள் அந்த ஒளியில் திருமகள் தோன்றிக் காட்சி யளித்தாள். இருவரும் அவளை வணங்கி வழி பட்டார்கள்.

திருமகள் கூறுகின்றாள்: "தேவேந்திரனே! என்னைத் திரு மகள் என்று தெரிந்துகொள். ஆசாரமும் சத்தியமும் உள்ள இடத்தில் நான் வசிப்பேன். அசுரர்களிடம் நற்குணங்கள் மிகுதியாக இருந்தபடியால் அவர்களிடம் நான் வசித்தேன். அசுரர் கள் அடக்கமாக இருந்தார்கள். அதிதிபூசை செய்தார்கள். தெய்வ வழிபாடு செய்தார்கள். அவர்கள் பொறாமைப் படுவதில்லை. இன் சொல் இயம்பினார்கள். தவஞ் செய்தார்கள். மூன்று வேளை நீராடி னார்கள். உதய நேரத்தில் அவர்கள் தூங்கியதில்லை. பணியாளர் களிடம் பட்சமாக இருந்தார்கள். விரதங்களை அநுஷ்டித்தார்கள். கருணையுடன் அன்புடையவர்களாக இருந்தார்கள். இரவில் தயிரை யும் சத்துமாவையும் அருந்தாதிருந்தார்கள். அந்தணர்களிடம் அன் பாக இருந்தார்கள். கொடுப்பார்களேயன்றி வாங்குவதில்லை. மெலிந் தவர்களை ஆதரித்தார்கள். அதிதியுண்ட மிச்சத்தையுண்டார்கள். சிறந்த குணங்கள் அனைத்தும் அசுரர்களிடம் இருந்தன. அதனால் நான் அசுரர்களிடம் வசித்தேன்.

கால வேற்றுமையால் அசுரர்கள் குணக்கேடர்களாக ஆனார்கள். பெரியோர்களைப் பரிகசித்தார்கள். ஆன்றோர்களைக் கண்டு எழுந் திருக்காமல் ஆசனத்தில் அமர்ந்திருந்தார்கள். அறநெறிகளை விட்டு விலகினார்கள். மைந்தர்கள் தந்தையை அவமதித்தார்கள். தேவ பூஜையின்றி உண்டார்கள். இரவில் தயிரையுண்டார்கள். கன்று போட்ட பசுவின் பாலை பத்து நாட்கள் விலக்காமல் குடித்தார்கள். தான்யங்களை இறைத்தார்கள். இரவில் எள்ளை யுண்டார்கள். தான்றி புன்கு என்ற மரத்தின் நிழலில் இருந்தார்கள். அலரிப் பூவைச் சூடிக் கொண்டார்கள். தாமரை விதைகளைத் தின்றார்கள். இரண்டு கை களாலும் தலையைச் சொறிந்து கொண்டார்கள். மலர்களை மோந்து பார்த்தார்கள். தெய்வ வழிபாட்டை விட்டார்கள். சிறுவர்கள் பார்த்துக் கொண்டிருக்க பட்சணங்களை உண்டார்கள். உதய காலத் தில் தூங்கினார்கள். பெண்கள் ஆண் வேடத்திலும், ஆண்கள் பெண் வேடத்திலும் நடித்தார்கள். பிறர் பொருளை விரும்பினார்கள். பெண் ள்க கணவனை ஏவல் புரியச் செய்தார்கள். நன்றி மறந்தார்கள். நாஸ்தி கர்களாக ஆனார்கள். இப்படி அவர்கள் நற்குணமின்றி தீக்குணங் களையுடையவர்களாக ஆனபடியால், நான் அசுரர்களை விட்டு வில கினேன். உன்னை வந்து அடைந்தேன்" என்றாள். இந்திரன் திருமகள் அருள் பெற்று தேவலோகம் சேர்ந்தான்" என்று கூறினார்.

யுதிஷ்டிரர், "பிதாமகரே! மூலப்ரகிருதியைக் காட்டிலும் சிறந்த பிரம்மத்தின் பதம் எது? அதனை எத்தகையவன் அடைவான்?" என்று கேட்டார்.

## ஜைகீஷவ்யரது பெருமை

பீஷ்மர் "பாரத! மோட்ச தர்மங்களில் நிலைத்தவனும், அற்ப ஆகாரமுள்ளவனும், பொறி புலன்களை வென்றவனும் மூலப்ரகிருதியைக் காட்டிலும் மேலான பிரம்மத்தின் பதத்தைப் பெறுகின்றான்.

அஸிதரென்னும் தேவலர் ஒரு சமயம் மிகப் பெரிய ஞானியாகிய ஜைகீஷவ்யரைச் சந்தித்தார். "மாதவரே! நீர் வந்தித்தால் மகிழ்வதில்லை. நிந்தித்தால் வருந்துவதில்லை. இந்த தன்மைக்குக் காரணம் யாது? இந்த அறிவு உமக்கு எப்படி வந்தது?" என்று கேட்டார்.

ஜைகீஷவ்யர் கூறுகின்றார். "தேவலரே! இந்த உத்தமமான தத்துவத்தை உமக்கு உபதேசிக்கின்றேன். கவனமாகக் கேளும். ஞானத்தை உண்மையில் அடைந்தவர்கள் அடிப்பவர்களைத் திருப்பியடிக்க மாட்டார்கள்; கிட்டாத பொருளைப் பற்றிச் சிந்திக்கமாட்டார்கள். இழந்த பொருளைப் பற்றி எண்ணவும் மாட்டார்கள். தமது ஆற்றலுக்கு ஏற்ப உதவி புரிவார்கள். மனத்தாலும் வாக்காலும் செய்கையாலும் ஒருவனுக்கு விரோதஞ் செய்யமாட்டார்கள். பிறர் பொருளைக் கண்டு புழுக்கங் கொள்ள மாட்டார்கள். பிறரை நிந்திக்கவுஞ் செய்யார்கள். எல்லா வுயிர்களுக்கும் நன்மையே செய்வார்கள். யார் ஒருவரையும் விரோதிப்பதில்லையோ அவருக்கு விரோதிகள் ஏது? இந்த அறத்தை நான் மேற்கொண்டிருக்கின்றேன். எவன் பிறர் கூறும் கடுஞ் சொற்களைத் தாங்கிக் கொள்ளுகின்றானோ அவன் மேலான கதியை யடைகின்றான். அவன் அடையும் கதியை தேவர்களும் கந்தர்வர்களும் அடைய மாட்டார்கள்" என்றார். தேவலர் எல்லா துவந்தங்களையும் விட்டு அவருக்குச் சீடரானார்.

எல்லா உலகங்கட்கும் பதியானவரும், மண், நீர், கனல், காற்று, வெளி, கதிர், மதி, ஆன்மா என்ற எட்டு மூர்த்திகளுள்ளவரும், எண் குணருமாகிய மகாதேவர் மேருமலையில் வடகிழக்கில் ஒரு இனிய சோலையில் அமர்ந்திருந்தார். தேவர்களும் திசை பாலகர்களும் கந்தர்வர்களும் அவரைத் துதி செய்து கொண்டிருந்தார்கள். பார்வதி தேவி பரமேச்வரரைப் பார்த்து "எம்பெருமானே! பொருள் எது?" பொருளின் சக்தி எது?" என்று வினவினாள். மகாதேவர் "தேவீ! நான் பொருள்; நீ பொருளின் சக்தி நான் புசிக்கின்றவன்; நீ புசிக்கத் தக்க பொருள். நான் பரம் நீ பிரகிருதி. நம்மில் வேற்றுமையில்லை" நான் திருமால், நான் பிரமன்; நான் யாகம்" என்றார்.

பார்வதி "பசுபதியே! இந்த இரண்டினுள் எது உயர்ந்தது. உண்மையை யுரைக்கவேண்டும்" என்று கேட்டாள். அப்போது பார்வதி பரமேச்வரருக்கு இடையிலிருந்து ஜைகீஷவ்யர் சிரித்துக்கொண்டு, "பொருள்தான் உயர்ந்தது. பொருளின் சக்தி அதில் வயப்பட்டது" என்று கூறி முழக்கஞ் செய்தார். இந்த வசனத்தைக் கேட்ட இமய வல்லி 'யார் இவன்?" என்று சினத்துடன் கேட்டாள். ஜைகீஷவ்யர் ஒன்றும் கூருமல் போய்விட்டார்.

சிவபெருமான் சிரித்துக் கொண்டே, "தேவீ! இவன் ஜைகீஷவ்யன் என்ற மகாமுனிவன் மிகவும் சாந்தமானவன்; என்னுடைய பக்தன்; எனக்குத் தோழன்; என் சிடன் மீது நீசீற்றங்கொள்ளாதே" என்ருர். உமாதேவியார் "பரமபதியே! நான் உம்மைக் கேட்டுக் கொண்டிருக்கும்போது இவன் குறுக்கிட்டுப் பேசுவது முறையா? அவன் என்ன சொன்னுன்? அவனை நான் பார்க்க விரும்புகிறேன்" என்ருள்.

பரமேசுவரர் பார்வதியுடன் விடைமீது ஏறிப் புறப்பட்டார். "பார்வதி! ஜைகீஷவ்யன் ஆசையற்றவன்; பரம யோகி: துவந்துவங்களை அறவே விட்டவன்; அறிவுள்ளவன். ஒரேவிதமான இயற்கையுள்ளவன். அவனை நீ பார்த்து உண்மையை யுணர்வாயாக' என்று கூறிக்கொண்டே சென்ருர்.

ஜைகீஷவ்யர் உடம்பை மறைக்க வேண்டி கந்தைகளை எடுத்துத் தைத்துக் கொண்டிருந்தார். பார்வதி பரமேசுவரரைக் கண்டு பல முறை பணிந்தார். பரவினுர்.

சிவபெருமான் "ஜைகீஷவ்ய! நீ விரும்புகின்ற அனைத்தும் என்னிடம் இருந்து வரமாகப் பெற்றுக் கொள்" என்ருர்.

ஜைகீஷவ்யர் "சம்புவே! நான் எல்லாம் உடையவனுக இருக்கின்றேன். தேவரீரிடமிருந்து வரமாகப் பெறுவதற்கு ஒன்றுமில்லை. நீர் போய் வரலாம்" என்ருர். சங்கரர் புன்னகை புரிந்து "பழந்துணியைத் தைத்துக் கொண்டிருக்கின்ற நீ எல்லாம் உடையவனு? மறுபடியும் கூறுகின்றேன். வேண்டிய வரங்களைக் கேள்: தருகின்றேன்" என்ருர். ஜைகீஷவ்யர் "மூவர்க்குந் தேவர்க்குந் தலைவரே! எனக்குத் தேவையான பொருள் ஒன்றுமேயில்லை. ஆதலால் வேண்டியதுமில்லை. மன்னிக்க வேண்டும்" என்ருர். பரமேசுவரர் பார்வதியைப் பார்த்து சிரித்துக்கொண்டு மறைந்தருளினுர். இத்தகைய ஞானிகள் தாம் பிரம்மத்தின் பதத்தைப் பெறுகின்ருர்கள்" என்ருர்.

(தொடரும்)

## புதிய வெளியீடுகள்

1. கட்டுரைக் கனிகள்
பல ஆண்டுகளாக நமது திருப்புகழமிர்தத்தில் வெளிவந்துள்ள முச்கியமான 67 கட்டுரைகளின் தொகுப்பு. மிகவும் குறைந்த விலையில் வெளியிடப்பட்டுள்ளது. 420 பக்கங்கள் விலை ரூ. 3—00. பதிவு தபாற் செலவு ரூ. 1—10.

2. கற்புக் கனிகள்—முதற் புத்தகம்
கற்பு என்னும் தலைப்பின்கீழ் வெளிவந்த சிறுகதைகள் 21 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00. தபாற் செலவு 0—20

3. கற்புக் கனிகள்—இரண்டாம் புத்தகம்
கற்புக் கதைகள் 16 கொண்ட தொகுப்பு விலை ரூ. 1—00.
தபாற் செலவு ரூ. 0—20

4. கற்புக் கனிகள்—மூன்றுவது புத்தகம் (11 சிறு கதைகள்) ரூபாய் 1—00. தபாற்செலவு 0—20

5. கற்புக் கனிகள்—நான்காவது புத்தகம்
13 சிறு கதைகள் கொண்டது. விலை 1—00. தபாற் செலவு 0-20
2, 3, 4, 5க்கு ரிஜிஸ்டர் தபாற் கட்டணம் 0—75 வேறு

6. மகாபாரதம்—வியாச பகவான் அருளிய பாரதத்தைத் தழுவிய வசனத்துடன், வில்லிபுத்தூரார் பாரதத்திலிருந்து 200 பாடல்கள் உரிய இடங்களில் விரவி வருவது. கிரௌன் ⅛ அளவில் 544 பக்கங்கள்—(மூன்றுவது பதிப்பு) விலை ரூ. 5—00. தபாற் செலவு ரூ. 1-25

---